REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30

படிப்பு

படித்தவர், படிக்கத் தெரியாதவர்களுக்கு படிக்கவும், எழுதவும் கற்றுக் கொடுக்க வேண்டும்.

- அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

கலை

கலை ஓர் இன மக்களின் மனப் பண்பு. அவ்வின மக்களிடையே தோன்றும் தெளிவு, வீரம் ஆகியவற்றின் எடுத்துக் காட்டு.

- பேரறிஞர் அண்ணா



மலர்: 3 சென்னை 16—5—1979 புதன் வெளியீடு 17—5—1979 வியாழன் இதழ்: 207

## புறப்படுங்கள்... எப்போதும்... எங்கும்... வெற்றி நமதே!

ஓ... நினைத்துப்பாருங்கள்.

1972 அக்டோபர் முதல் துன்மார்க்கர்கள் ஆட்சியிலிருந்து தூக்கியெறியப்பட்ட காலம் வரை... நடந்த கொடுமைகளை... அட்டகாசங்களை...படுகொலைகளை... பஞ்சமாபாதகங்களை... கழக அட்டூழியங்களை மீண்டும் ஒரு முறை நினைத்துப்பாருங்கள்.

நீதிமன்றங்களின் நீண்ட படிக்கட்டுக்களில் ஏறி இறங்கி நீண்ட பயணம் போவதைத்தவிர வேறு இயக்கப் பணிகளைச் செய்ய விடாமல் தடுக்கப்பட்ட அந்தக்காலத்தை... இதய தெய்வமாம் புரட்சித்தலைவரின் ரத்தத்தின் ரத்தங்களே மீண்டும் ஒருமுறை நினைத்துப்பாருங்கள்.

எப்போதும் பம்பரம் போல் பணியாற்றிக் கொண்டிருக்கும் கண்மணிகளே... இப்போது விழி மூடக்கூட நேரமில்லாத நிலையில் வேலை வந்து விட்டது.

தஞ்சை, நாகை தேர்தல் களம் அழைக்கிறது

புரட்சித் தலைவரின் சீரிய வழி காட்டுதலின்படி கழகச் செயற்குழு கூடி அருமையான முடிவுகளை எடுத்திருக்கிறது.

தஞ்சை... நாகை... இதைத் தவிர இப்போது சிந்திப்பதற்கு ஒன்றுமில்லை.

லஞ்ச லாவண்யத்தால், முறைகேட்டால், அக்கிரமங்களால் ஆளுங்கட்சி என்ற அந்தஸ்தை இழந்த தி. மு. கழகம்... பொதுத் தேர்தலுக்குப் பிறகு நடந்த சம்பவங்களால் எதிர்க்கட்சியாக இருக்கும் தகுதியையும் தார்மீகமாக இழந்த பின்னரும் வாய்ப்பறை கொட்டுகிறது... நீட்டி முழக்குகிறது.

நமக்கு வேலை வந்த இந்த நேரத்தில் கருணாநிதி ஆட்சி செய்த வேளையில் நடந்தவற்றை மக்களுக்கு மீண்டும் நினைவூட்டுவோம்.

பழைய ஆட்சியாளரின் கரங்கள் இரத்தத்தாலும், விரல்கள் அக்கிரமத்தாலும், உதடும், நாவும் பொய்யாலும் கறைபட்டுக் கிடப்பதை ஊருக்கு மீண்டும் சொல்லும் வேளை இதுவே.

கருணாநிதி ஆட்சி செய்தபோது.... கட்டுவிரியனின் முட்டைகளை அடைகாத்து.... சிலந்தி வலைகளைப் பின்னியதன் விளைவாக ஊரெல்லாம் விரியன் குட்டிகள் ஊர்வலம் வந்த கதைகளை மக்கள் மறந்துவிடவில்லை.

எனினும்...மீண்டும் ஒருமுறை அவற்றை மக்களுக்கு நினைவூட்டுவோம்.

நியாயம் எங்களுக்கு தூரமாயிருக்கிறது. நீதியைக் காணோம். வெளிச்சத்தைப் பார்க்கவே இல்லை. எங்கும். அந்தகாரம்... எல்லாம் இருள் மயம் என்று கருணாநிதி ஆட்சி காலத்தில் மக்கள் வாய்விட்டுக் கதறினர்கள்.

மக்கள் மறந்துவிடவில்லை. எனினும் மீண்டும் ஒரு முறை நினைவூட்டுவோம்.

புறப்படுங்கள்...

தஞ்சையென்ன... நாகையென்ன... எங்கானுலும் வெற்றி நமதே!

புறப்படுங்கள்... உடன் புறப்படுங்கள்.

**நமக்கெல்லாம்... பொற்சபை, வெள்ளிச் சபை, தெய்வச் சபை, நடன சபை, சிற்சபை, இரஜித சபை எல்லாமே புரட்சித்தலைவரின் இதயமே....**

நமது இதய தெய்வம் கட்டளை இட்டுவிட்டார். அவரது காலடியில் வெற்றிக் கனிகளை சமர்ப்பிக்க இப்போதே புறப்படுங்கள்.

**நமக்கு ஆன்ம அசைவையும், ஆன்ம நெகிழ்ச்சியையும் தரும் ஒரே சக்தி புரட்சித்தலைவர்தான்.**

அவர் உள்ளம் வெற்றிகளால் மகிழும் வரை உறங்குவதில்லை என்று சூளுரைத்துப் புறப்படுங்கள்.

**நமக்கெல்லாம்... மாயாசக்தியாய் கிரியாசக்தியாய், பராசக்தியாய், இச்சா சக்தியாய், ஞானசக்தியாய், ஆதிசக்தியாய், சிற்சக்தியாய், திகழ்வது புரட்சித்தலைவரே!**

**ஆம்... நமது தெய்வத்தின் கட்டளை பிறந்துவிட்டது.**

**புறப்படுங்கள்... வெற்றி நமதே...!**

-கார்க்கி

## ஜனதா அரசை எதிர்த்து ஆர்ப்பாட்டம்

# டெல்லியை குலுக்கிய இந்திரா பேரணி

## லட்சோபலட்சம் மக்கள் பங்கேற்பு

புதுடெல்லி, மே 16-ஜனதா அரசுக்கு எதிர்ப்பு தெரிவிக்கவும், விசேட கோர்ட் மசோதாவை கைவிடக் கோரியும் இந்திராகாந்தி தலைமையில் இ.காங்கிரஸ் இன்று நடத்திய மாபெரும் பேரணி டெல்லி மாநகரையே குலுக்கியது

இந்தப் பேரணியில் லட்சக் கணக்கான மக்கள் கலந்து கொண்டனர்.

ஊர்வலத்தின் முதல் பகுதி புதுடெல்லியில்உள்ள ராம் லீலா மைதானத்தில் இருந்த போது ஊர்வலத்தின் கடைசிப்பகுதி பழைய டெல்லியில் உள்ள செங்கோட்டையில் இருந்தது.

ஜனதா அரசுக்கு எதிர்ப்பு தெரிவிக்கவும், விசேட கோர்ட் மசோதாவைக்கண்டிக்கவும் இ. காங்கிரஸ் கட்சி இன்று டெல்லியில் பிரும்மாண்டமான பேரணியை நடத்தியது.

இந்த பேரணியில் இந்தியாவின் எல்லா மாநிலங்களில் இருந்தும் லட்சக் கணக்கானவர்கள் வந்து கலந்து கொண்டனர்.

டெல்லியைச்சுற்றி தடை உத்தரவுகள் போட்டிருந்த போதிலும்டெல்லிக்குவந்து சேருகிற பலரயில்கள் ரத்து செய்யப்பட்ட போதிலும் லட்சோபலட்சம் மக்கள் இ. காங்கிரஸ் நடத்திய பேரணியில் பங்கேற்றனர்.

### சஞ்சய் காந்தி

ஊர்வலத்தில் சஞ்சய் காந்தியும் காணப்பட்டார் பல்வேறு மாநில காங்கிரஸ் தலைவர்களும், நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

ஊர்வலம் செல்லும் வழியெல்லாம் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. காங்கிரஸ் கொடிகள் எங்கும் பறக்கவிடப்பட்டிருந்தன.

### இந்திரா படம்

ஏராளமான மக்கள் சைக்கிள்களிலும் ஸ்கூட்டர்களிலும் வந்து கலந்து கொண்டனர். ஊர்வலத்தினர் இந்திராவின் பெரிய படங்கள் ஒட்டிய அட்டைகளை கையில் வைத்துக் கொண்டிருந்தனர்.

ஜனதா அரசுக்கு எதி



ராக ஊர்வலத்தினர் கோஷம் எழுப்பினர். விசேட கோர்ட் மசோதாவை எதிர்த்து முழக்கம் எழுப்பப்பட்டது.

ஊர்வலத்தில் கலந்து கொண்ட இ. காங்கிரஸ் தொண்டர்கள் சிலரிடம் கத்தி இருந்ததாகவும் அவற்றைப் போலீசார் பறிமுதல் செய்து விட்டதாகவும் அதிகாரிகள் தெரிவித்தனர்.

### இந்திரா

ஊர்வலத்தில் திறந்த ஜீப் காரில் இந்திராகாந்தி வந்தார். அவரைக் கண்டதும் மக்கள் ஆரவார முழக்கம் எழுப்பினர்.

இதுவரை ஜனதா அரசு அமைந்தபின் டெல்லியில் எத்தனையோ ஊர்வலங்கள் நடந்திருந்தாலும் இன்று இ. காங்கிரஸ் நடத்திய பேரணி தனித்தன்மை

(2-ம் பக்கம் பார்க்க)



பாகதாத் நகரில் உலக மகளிர் மாநாட்டில் கலந்து கொண்டு திரும்பிய அமைச்சர் பி. டி. எஸ்சை முதல்வர் புரட்சித்தலைவர் விமான நிலையத்தில் வரவேற்ற காட்சி.

### அமைச்சர் காளிமுத்து பேட்டி:

# சென்னை நகரில் புதிதாக 4 ஆயிரம் மின் விளக்குகள்

சென்னை, மே 16- சென்னையில் 4 ஆயிரம் தெரு விளக்குகள் நகரெங்கும் அமைக்கப்படும்: ரூபாய் ஐந்தரை கோடி செலவில் புதிதாக சாலைகள் போடப்படும் என்று அமைச்சர் காளிமுத்து இன்று பேட்டியளித்தார்:

உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து இன்று பத்திரிக்கையாளர்களுக்கு பேட்டியளித்துக் கூறியதாவது:

கடந்தவாரம் புயல்-கடும் மழை பெய்தபோது முன்னதாகவே எடுக்கப்பட்ட தடுப்பு நடவடிக்கைகள் காரணமாக பெரும் சேதம் தவிர்க்கப்பட்டது.

கடந்த 1978-79-ஆம் ஆண்டு ரூ. 4 கோடி செலவில் ரோடுகளை பராமரிக்கத் தீர்மானிக்கப்பட்டது.

ஆனுல் ரூ 4 கோடியே 18 லட்சம் ரூபாய் செலவாகியது. வரும் 1979-80ம் ஆண்டு ரூ ஐந்தரைகோடி சாலைகளை பராமரிக்க ஒதுக்கப்பட்டுள்ளது.

உலக வங்கிக் குழுவைச் சேர்ந்தவர்கள் வருகிற ஜூலை மாதம் சென்னைவருகிறுர்கள்.

என்.யூ.டி.பி-2 என்ற திட்டத்தின் கீழ் மதிப்பிட இருக்கும் அந்தத் திட்டத்தில் ரூ. 30 கோடியை சென்னை நகர சாலைகளை சீரமைக்க அவர்களிடமிருந்து மாநகராட்சி கேட்கும்.

மழைநீர், கழிவுநீர், செல்வதற்காக குழாய்கள் சீரமைக்க 78-79ஆம் ஆண்டு ரூ. 31.38 லட்சம் செலவிடப்பட்டது.

வரும் 79-80ஆம் ஆண்டு ரூ 89 லட்சம் செலவிடப்படும்.

### மின்சாரம்

கடந்த 78-79 ஆம் ஆண்டு 512 மின் விளக்குகள் தான்போடப்பட்டது.

வரும் 79-80 ஆம் ஆண்டு 4 ஆயிரம் மின் விளக்குகள் புதிதாக அமைக்கப்படும்.

இவற்றில் 300 விளக்குகள் குடிசைப் பகுதியிலும் 3669 விளக்குகள் குடிசை மாற்று வாரியப் பகுதிகள் மற்றும் நகரின் பரவலானப் பகுதிகளில் அமைக்கப்படும்.

சோடியம் வேபர்ஸ் கோடுகள் சென்னை நகரின் முக்கியமான சாலைகளான அண்ணாசாலை, காமராஜ்சாலைஆகியஇடங்களில் அமைக்கப்படும். இது மஞ்சள் அல்லது ஆரஞ்சு வண்ணத்தில் இருக்கும்.

### விளையாட்டுத் திடல்கள்

சென்னைநகரில் இளைஞர்களுக்காக மொத்தம் 12

(2-ம் பக்கம் பார்க்க)



# தஞ்சை மாவட்டத்தில் புதிய வழித்தடங்களில் பஸ் தொடக்க விழா

## எஸ். டி. எஸ். - பொன்னையன் பங்கேற்பு

தஞ்சை, மே 16-- தஞ்சை மாவட்டத்தில் புதிய வழித்தடங்களில் பேருந்து தொடக்க விழா நடந்தது- அமைச்சர்கள் எஸ். டி. எஸ். பொன்னையன் ஆகியோர் இந்த விழாவில் பங்கேற்று புதிய பேருந்துகளை துவக்கி வைத்தனர்.

தமிழகத்தில் இதுவரை பஸ் போக்குவரத்து வசதி பெருத 129 கிராமங்களுக்கு முதல் முறையாக பஸ் போக்குவரத்து வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

இதனுல் ஒரு லட்சத்து 90 ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் பயன் பெறுகிறுர்கள்.

திருத்துறைப் பூண்டி, மன்னுர்குடி, திருவோணம், பாபநாசம், தஞ்சை ஆகிய 5 ஊர்களிலிருந்து 37 கிராமப்புறங்களுக்கு பல்வேறு வழித்தடங்களில் பஸ் போக்குவரத்து துவக்கி வைக்கப்பட்டது.

திருத்துறைப்பூண்டி, திருவோணம், தஞ்சை ஆகிய இடங்களில் அமைச்சர் பொன்னையன் தலைமையில் வருவாய்த்துறைஅமைச்சர் எஸ்.டி.எஸ். பேருந்துகளை துவக்கி வைத்தார்.

மன்னுர்குடி, பாபநாசம் ஆகிய ஊர்களில் அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமையில் அமைச்சர் பொன்னையன் பேருந்து வசதிகளை துவக்கி வைத்தார்.

எல்லா நிகழ்ச்சிகளிலும் மாவட்ட ஆட்சித்தலைவர் கங்கப்பா அரசு தலைமைக் கொறடா துரை கோவிந்தராசன் மற்றும் பலர் கலந்து கொண்டு





பேசினர்.

பாபநாசம்தஞ்சை ஆகிய இடங்களில் நடந்த பேருந்து துவக்கவிழாவில் தஞ்சைமாவட்ட அறங்காவலர் குழு தலைவர் கோவி. நாராயணசாமி கலந்துகொண்டார்.

# அவசரகுடுக்கை கருணாநிதிக்கு

முடியுமானால் சட்டசபையிலிருந்து வெளியேற்றிப் பார்க்கட்டும் என்று கருணாநிதி சவால் விட்டிருக்கிறார்!

ஆயிரக்கணக்கான அற்ப ஆயுசுச் சவால்களை விட்டு அம்பலப்பட்டு நிற்கும் கருணாநிதிக்கு மேடை ஒலி பெருக்கி என்றால் ஏதாவது ஒரு சவால் விட்டுத் தீர வேண்டும் என்பது அவரது தலை எழுத்துப் போலும்!

நான் ஆளப்பிறந்தவன்! என் மீது கை வைத்துப் பார்க்கட்டும், ரத்த ஆறு ஓடும், பிணமலை குவியும் என்றெல்லாம் சவால் விட்டார்! அவருடைய மகுடம் பறிக்கப்பட்டபோது என்ன நடந்தது என்பதை நாடு அறியும்! அத்துடன் நிற்கவில்லை.

''திமுக தேர்தலில் நிற்கும்! எங்களை யாராலும் தோற்கடிக்க முடியாது'' என்று சவால் விட்டார். அந்த சவாலின் கதி என்ன ஆயிற்று என்று தெரியும்!

''ஆகா! புரட்சித்தலைவராவது முதல்வராக ஆட்சி நடத்துவதாவது.பார்க்கிறேன் ஒருகை'' என்று சவால் விட்டார். அந்த சவால் என்ன ஆனது என்பதையும் பார்த்து வருகிறோம்.

''முடியுமானால் என்னைக்கைதுசெய்துபார்க்கட்டும்'' என்று வலியவந்து மாட்டினார்! 40 நாள் சிறை வைக்கப்பட்டார்! பிரளயம் வரவில்லை! சூறாவளி வீசவில்லை! அதற்குப் பிறகாவது வாயை மூடிக்கொண்டிருக்க முடிந்ததா?

இல்லை: கடந்த ஆண்டு செப்டம்பர் 24ந்தேதி சென்னைக் கூட்டத்தில் பேசும்போது அடுக்கடுக்காக எட்டு போராட்டம் நடத்தப் போகிறேன் என்று கருணாநிதி அறிவித்தார்! அது மட்டுமல்ல செயல் வீரர்களின் பட்டியலையும் முரசொலியில் வெளியிட்டார்!

ஆகா! கிடு கிடு போராட்டங்களைக் காண நாடே ஏங்கியிருந்தது. ஆனால் சவால்கள் சமாதிக்குப் போய் விட்டன!

அடுத்து அண்ணாசிலைக்காக சவால்விட்டார்! பல்டியடித்தார்.

அதைவிட பெரியவிஷயம்! "காஞ்சி சங்கர மடத்துக்கு எதிரே பெரியார் சிலையை வைத்தே தீருவேன்!" என்று மேடையிலும் சட்டசபையிலும் கருணாநிதி சவால் விட்டார்! ஒரு மாத காலம் என்று தவணையும் வைத்தார்.

காலண்டரில் தேதிகள்தான் பறந்துகொண்டிருக்கின்றன. சவால் என்ன கதி ஆயிற்று என்பதுதான் தெரியவில்லை!

இந்த லட்சணத்தில் புதிய சவால் விடுகிறார்!

விவரங்களை அறியாமல் நுனிப்புல் மேய்வதும் சவால் விடுவதும் பிறகு பதுங்குவதும் கருணாநிதியின் வாடிக்கை ஆகிவிட்டது!

நடந்தது என்ன? உதகையில் புரட்சித் தலைவரை நிருபர்கள் சந்தித்தபோது சில விளக்கங்களைக் கேட்டார்கள்!

இந்திரா போட்டியிடுவது பற்றியபிரச்சினை வந்த போது-''விசாரணைக் கமிஷன்களுடைய கண்டு பிடிப்புகள் வந்துள்ள நிலையில் இந்திராவுக்கு அனைத்திந்திய அண்ணா திமுகழகம் ஆதரவு தருவது தவறு என்று சில ஜனதா கட்சி தலைவர்கள் பேசுகிறார்களே!'' என்று சில நிருபர்கள் கேட்டார்கள்.

விசாரணைக் கமிஷன்களுடைய கண்டுபிடிப்புகளுக்கு ஆளானவர்கள் சட்டமன்ற நாடாளுமன்றங்களில் உறுப்பினராக அமரதடை இல்லை. ஷா கமிஷன் கண்டுபிடிப்புகள் காரணமாக இந்திரா எம்.பி.யாக இருக்கக்கூடாது என்றால் அதே நிலை கருணாநிதிக்கும் பொருந்துமே!'' என்று புரட்சித் தலைவர் விளக்கம் அளித்திருக்கிறார்!

இந்திரா வெளியேற்றப்பட்ட சம்பவத்தையும் விசாரணைக்கமிஷன் பற்றி புரட்சித்தலைவர் தந்த விளக்கத்தையும் சில ஏடுகள் முன் பின் என்று தவறாக இணைத்து வெளியிட்டுள்ளன!

இதை ஒரு சாக்காக வைத்துக் கொண்டு கருணாநிதி, ''ஆகா என்னை சட்டசபையிலிருந்து வெளியேற்ற முடியுமா?'' என்று சவால் விடுகிறார்!

செருப்பைக்காட்டி, மைக்கை உடைத்து சட்டமன்றத்தையே அசிங்கப்படுத்திய அவலட்சணங்களுக்கு வக்காலத்து வாங்கி வரும் கருணாநிதி தன்னைத்தானே சட்டசபையிலிருந்து வெளியேற்றிக் கொண்டிருக்கிற நிலையில் அவருடைய புதுச்சவால்கள் செத்துப் பிறந்த குழந்தைகளாகவே காட்சி தரும்!

அந்தோ! பரிதாபம்!

## காளிமுத்து பேட்டி

(முதல் பக்க தொடர்ச்சி)

விளையாட்டுத் திடல்கள் அமைக்கப்படும்.

வடசென்னையில் விநாயகபுரம், தண்டையார் பேட்டை, அம்பேத்கார் நகர், கொருக்குப்பேட்டை பிரைட்டன் ரோடு, கன்னிகாபுரம்.

சத்தியவாணிமுத்து பூங்காவின் பின்புறம், திரு வி. க. நகர்- செம்பியம், மாதவரம்,

தென்சென்னையில் அண்ணாநகர், பட்டினப் பாக்கம், மேற்கு மாம்பலம், கே.கே.நகர், கீழ்ப் பாக்கம் கார்டன், அசோக் நகர் ஆகிய இடங்களில் விளையாட்டுத் திடல்கள் அமைக்கப்படும். வரும் 30 6-79க்குள் இப்பணிகள் முடிக்கப்படும்.

### புதிய மதிய உணவுக்கூடம்

சென்னை நகரில் ஏற்கெனவே நான்கும் மதிய உணவு தயாரிக்கு இடங்கள் உள்ளன.

ராஜா அண்ணாமலைபுரத்தில் 14-11-79க்குள் புதிதாக ஒரு மதிய உணவுக் 'கூடம்' கட்டி முடிக்கப்படும். இதில் நாள் ஒன்றுக்கு 15ஆயிரம் பேருக்கு உணவுதயாரிக்கப் படும்.

### பள்ளிகள்

அனைத்து மாநகராட்சிப் பள்ளிகளும் ஜூன் மாதம் 11-ஆம் தேதி திறக்கப்படும்.

### உரம் தயாரிப்பு

சென்னை நகரில் நாள் ஒன்றுக்கு 1200 டன் குப்பைகள் சேருகின்றன. இந்தக் குப்பைகளைக் கொண்டு கம்போஸ்ட்(இயற்கைஎரு) உரம் தயாரிக்கப்படும். இதற்கான திட்டம் பரிசீலனையில் உள்ளது.

### சுகாதாரம்

கடந்த வாரம் பெய்த மழையால் கடலோரப் பகுதிகளில் உள்ள மக்கள் எவரும் நோயால் பாதிக்கப்படவில்லை.

சென்னை நகரக் கடலோரப் பகுதிகளில் 35 ஆயிரம் பேர் வசிக்கின்றனர். இவர்கள் எவரும் எந்த நோயாலும் பாதிக்கப்படவில்லை.

### குடும்ப நலம்

கடந்த 1978-79 ஆம் ஆண்டில் 19,144 பேர்களுக்கு குடும்பக்கட்டுப்பாடு சிகிச்சை அளிக்க திட்டமிடப்பட்டது. ஆனால் 22 ஆயிரத்து 560 பேர் குடும்பக்கட்டுப்பாடு சிகிச்சை பெற்றனர்.

வருகிற 79 - 80 ஆம் ஆண்டில் 30 ஆயிரத்து 266 பேருக்கு சிகிச்சையளிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

கடந்த ஏப்ரல் மாதம் மட்டும் 1,599 பேருக்கு சிகிச்சையளிக்கப்பட்டது. இந்த ஆண்டில் 60 ஆயிரத்து 104 பேர் சிகிச்சை பெறுவார்கள் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

### மரம் வளர்த்தல்

சென்னை நகரைப் பசுமையாகச் செய்யும் வகையில் ஆண்டுதோறும் மரம் நடப்பட்டு வருகிறது.

78-79ம் ஆண்டில் பதினைந்தாயிரம் மரங்கள் நடுவதற்கு திட்டமிடப்பட்டது. ஆனால், 15 ஆயிரத்து 44 மரங்கள் நடப்பட்டன. வரும் 79 80ம் ஆண்டில் 25 ஆயிரம் மரங்கள் நடப்படும்.

தங்கள் தங்கள் வீடுகளுக்கு அருகில் நடப்படும் மரங்களை நீர் ஊற்றிப் பாதுகாக்க பொதுமக்கள் முயற்சிமேற்கொள்ள வேண்டும்.

வரும் ஜூன் மாதம் முதல் தேதியிலிருந்து வீடு வீடாக வந்து வாக்காளர் பட்டியல் சரி பார்க்கப் படும்.

1-1-79 அன்று 21வயது முடிவடைந்த அனைவரும் வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படுவர்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

# ஈராக் நாட்டில் பார்த்தது என்ன? பி. டி. எஸ். பேட்டி

**சென்னை, மே 16- ஈராக் நாட்டிற்குச் சென்ற அமைச்சர் பி. டி. எஸ்: அங்கு பார்த்து வந்த சிறப்பு அம்சங்கள் குறித்து நிருபர்களிடம் தெரிவித்தார்**

ஈராக் நாட்டில் மகளிர் மாநாட்டில் கலந்து கொண்டுவிட்டு திரும்பிய சமூகநலத்துறை அமைச்சர் பி. டி. எஸ். இன்று நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அவர் கூறியதாவது:-

ஈராக்நாட்டில்உள்ளநகர்களில் தெருக்கள் எல்லாம் சுத்தமாக உள்ளன.

அங்கு மதுவிலக்கு இல்லை என்றாலும் மது குடித்துவிட்டு வீதியில் கலாட்டா செய்கிறவர்களுக்கு உடனுக்குடன் தண்டனை கொடுக்கிறார்கள்.

பெண்கள் மரியாதையுடன் நடத்தப்படுகிறார்கள். பெண்கள் மட்டுமே தேர்தலில் போட்டியிடுவதற்கென்று தனித்தொகுதிகளையும் ஒதுக்கப்போகிறார்கள். இதற்காக விரைவில் சட்டம் இயற்றப்படும் என்று தெரிவித்தனர்.

அங்குள்ள தமிழ் மக்கள் எனக்கு வரவேற்பு அளித்தார்கள். புரட்சித் தலைவரின் சீரிய ஆட்சியை பலரும் பாராட்டினார்கள்.

அவர்களது கலாச்சாரத்தை அவர்கள் காத்து வருகிறார்கள்.

நமது நாட்டுப் பெண்கள் வெளிநாடுகளுக்குச் செல்லும்போது மேல் நாட்டு நாகரிகத்தில் இறங்காமல் சேலையை உடுத்துவதை அவர்கள் பாராட்டுகிறார்கள்.

உங்கள் கலாச்சாரத்தில் உறுதியாக இருக்கிறீர்களே என்று என்னைப்பாராட்டினார்கள்.

மகளிர் மாநாட்டில் பெண்கள் மேம்பாட்டுக்கான நல்ல கருத்துக்கள் வெளியிடப்பட்டன.

இவ்வாறு அமைச்சர் பி. டி. எஸ். கூறினார்:

## டி.கே.எஸ். மகள் திருமணம்

சென்னை,மே16-மறைந்த நாடக மேதை டி. கே. சண்முகத்தின் மகள் எஸ். மனோன்மணிக்கும், சோவியத் செய்தித்துறை, பத்திரிகைத் தொடர்புஅதிகாரி ஏ. சம்பந்தமூர்த்தியின் மகன் டாக்டர் எஸ். சங்கர் குமாருக்கும் நாளை (17ந்தேதி) வியாழன் காலை 9-45 மணிக்கு சென்னை, டாக்டர் ராதா கிருஷ்ணன் சாலை, யோக லட்சுமி திருமணமண்டபத்தில் திருமணம் நடக்கிறது.

மாலை 6 மணிக்கு நடக்கும் வரவேற்பு விழாவில் டி.எம்.சவுந்தரராசன் குழுவினர் இன்னிசை நடக்கிறது.

## டெல்லி குலுங்கியது

(முதல் பக்கத் தொடர்ச்சி)

வாய்ந்ததாக இருந்தது.

சாதிமத இன பாகுபாடு இல்லாமல் இ. காங்கிரஸ் பேரணியில் மக்கள் கலந்து கொண்டனர். இளைஞர்களும் தாய்மார்களும்பெருமளவில்பங்கேற்றுஉணர்ச்சியுடன் கோஷங்களை எழுப்பினர்.

ஊர்வலத்தைக் காண்பதற்கு வழியெங்கும் லட்சக்கணக்கான மக்கள் சாலையின் இருபுறமும் திரண்டு நின்றிருந்தனர்.

ஊர்வலத்தில் கலந்து கொண்ட லட்சோப லட்சம் மக்கள் ஜனதா அரசை எதிர்த்து எழுப்பிய முழக்கங்களால் டில்லியே குலுங்கியது.

## அமைச்சர் திடீர்சோதனை

மாநகராட்சி அலுவலகக் கட்டிடத்தில் அமைந்திருக்கும் சிற்றுண்டி விடுதியில் சென்று உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து திடீர் சோதனை செய்தார்.

சமையல் அறைப்பகுதிக்குச் சென்று, அங்கு வைக்கப்பட்டிருக்கும் பொருள்களைப் பார்த்தார்.

சிற்றுண்டிச்சாலை உரிமையாளரை அழைத்து, என்னென்ன வகையான உணவுகள் தயாரிக்கப்பட்டு பொது மக்களுக்குத் தரப் படுகிறது என்பதையும், எத்தனை பேர்கள் பணியாற்றுகிறார்கள் என்பதையும் கேட்டறிந்தார்.

சமையலறைப்பகுதி, பொருள்கள் வைக்கும் பகுதிகளை சுத்தமாகவைத்துக்கொள்ளும்படி எச்சரித்தார்.

ஜனதா மேலிடம் முடிவு:

# மொரார்ஜிக்கு புதிய நெருக்கடி: உட்கட்சி பூசலை தீர்க்கவேண்டும்

**புதுடெல்லி, மே 16-ஜனசங்கத்துக்கும் சரண்சிங் கோஷ்டிக்கும் இடையே உள்ள மோதலைத் தீர்க்கும் பொறுப்பு பிரதமர் மொரார்ஜியிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.**

ஜனதாக் கட்சியின் பார்லிமெண்டரி போர்டு கூட்டம் நடந்தது.

கட்சிப் பூசல்கள், கட்சித் தேர்தல்கள் ஆகியவை குறித்து கட்சியின் மூத்த உறுப்பினர்களைக் கலந்தாலோசித்துப் பிரதமர் மொரார்ஜி தேசாய் முடிவு எடுக்கவேண்டும் என்று கூட்டத்தில் கேட்டுக் கொள்ளப்பட்டது.

பார்லிமெண்டரி போர்டு 90 நிமிடநேரம் கூடி ஆலோசித்தது என்றாலும் உட்கட்சிப் பூசலுக்கு எந்தத் தீர்வையும் காண முடியவில்லை.

ஜனசங்கத்தினருக்கும், பாரதீயலோக்தளகோஷ்டியினருக்கும்இடையேஉள்ள மோதலை தீர்த்து வைக்கும் பொறுப்பு பிரதமர் மொரார்ஜி தேசாயிடம் ஒப்படைக்கப் பட்டது.

இவ்வாறு பிரதமரிடம் அந்தப் பொறுப்பை ஒப் படைக்கும் தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப் பட்டது.

பிரதமர் வீட்டில் நடந்த இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்ட சரண்சிங் பாதியிலேயே வெளியேறிப் போய் விட்டார். ''உடல் நலம் சரி இல்லாததால் தான் பாதியில் புறப்பட்டார். மற்றபடி ஒன்றுமில்லை'' என்று கட்சி பொதுச் செயலாளர் பிஜாய்சிங் நகார் கூறினார்.

## நுங்கம் பாக்கத்தில் டாக்டர் நாவலர் பேசுகிறார்

சென்னை, மே 16- சென்னை 101-வது வட்டம் ஆயிரம்விளக்கு தொகுதியைச் சேர்ந்த நுங்கம் பாக்கம், வடக்கு மாட வீதியில், நாளை (17ந்தேதி) வியாழன் மாலை 7மணிக்கு பிரும்மாண்டமான கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

பா.அங்கமுத்து தலைமை வகிக்கிறார். எம். ஆர். ராஜேந்திரன் முன்னிலை வகிக்கிறார். ஏ.ஆறுமுகம் வரவேற்புரையாற்றுகிறார்.

டாக்டர் நாவலர், டாக்டர் ஹண்டே எம்.எல்.சி., எம்.எஸ். அப்துல் காதர், நிலவழகன் சி.வி. அன்புத்தம்பி, எஸ். புரட்சிமணி, சைதை தமிழ்ச்செல்வன், கே.எஸ். மணி, மு. மன்னன், பெ. சீனிவாசன், ராமமூர்த்தி, காசீம், டி.ஆர்.துளசி, பிச்சைக் கண்ணு, ஆகியோர் பேசுகின்றனர்.

என். ஏழுமலை நன்றி கூறுகிறார்.

## குஜராத் தலைமை நீதிபதி விலகல்?

அகமதாபாத், மே. 16- மத்திய ஜனதா அரசைக் கண்டித்து குஜராத் உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி பி. ஜே. திவான் தனது பதவியை ராஜினாமா செய்யப்போவதாக அறிவித்துள்ளார்.

குஜராத் உயர்நீதி மன்றத்தில் 6 நீதிபதிகளின் பதவி காலியாக இருக்கிறது. தலைமை நீதிபதி இந்த இடங்களுக்கு நியமனம் செய்ய சிலப் பெயர்களை சிபாரிசு செய்தார். ஆனால் மத்திய அரசு இந்தப் பரிந்துரைகளைப் புறக்கணித்து வேறு 6 பேரை அறிவித்தது.ஆனால் மத்திய அரசு அறிவித்துள்ள பட்டியலில் தகுதியற்றவர்கள் இருப்பதால் அதை கண்டித்து தன்னுடைய தலைமை நீதிபதி பதவியை ராஜினாமா செய்யப்போவதாக பி. ஜே. திவான் எச்சரித்துள்ளார்.

## கூட்டுறவு சங்கங்கள் மீதான ஆய்வு குழுகோரிக்கை

சென்னை, மே17-1979ம் ஆண்டு கூட்டுறவுச் சங்கங்கள் சட்ட முன் வடிவு மீதான ஆய்வுக்குழு அச் சட்ட முன்வடிவின் மீதும் அதில் கண்டுள்ள பிரிவுகளைப்பற்றிய கருத்துக்களை தெரிவிக்கவும் தனிப்பட்டவர்கள் சங்கங்கள்நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து அக்கருத்துக்கள் அடங்கிய குறிப்புகளை அனுப்புமாறு கேட்டுக் கொண்டுள்ளது.

இக் குறிப்புகள் 15 6-79ம் தேதிக்குள் செயலாளர் சட்டமன்றப் பேரவைத்துறைசென்னை 9 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கருத்துரையில் அடங்கிய குறிப்புகள் தமிழ் அல்லது ஆங்கிலத்தில் இருக்கவேண்டும். கருத்துரைகளின் ஐம்பது பிரதிகள் அனுப்பப்பட வேண்டும்.

கடந்த ஏப்ரல் மாதம் 24-ந்தேதி தமிழ்நாடுஅரசு சிறப்பு வெளியீட்டில் இந்த சட்ட முன்வடிவு அதன் காரண நோக்கங்களுடன் வெளியிடப்பட்டிருக்கிறது.

# புயல் பாதிப்பு மக்களுக்கு மாடி வீடுகள்

**ராமபத்திரன் தகவல்**

**சென்னை, மே 16- காசிமேடு கடற்கரை பகுதியில் புயல்வெள்ளத்தால் பாதிக்கப்படும் மக்கள் நாகூரான் தோட்டம், கீரைதோட்டம் பகுதியில் கட்டப்படும் அடுக்குமாடி வீடுகளில் குடியமர்த்தப்படுவார்கள். இத் தகவலை குடிசை மாற்று வாரியத்தலைவர் ராமபத்திரன் தெரிவித்தார்.**

புயல் வெள்ளம் ஏற்பட்ட காசிமேடு குப்பம், கோட்டூர்புரம், சீனிவாசபுரம் ஆகிய பகுதிகளுக்கு குடிசை மாற்று வாரியத் தலைவர் ராமபத்திரன் சென்றார். அவருடன் தலைமைப் பொறியாளரும் சென்றார்.

காசிமேடுகுப்பம் பகுதியில் கடற்கரையில் வசிக்கும் மக்கள் புயல் வந்தபோது பாதுகாப்பான இடங்களில் அமர்த்தப்பட்டனர்.

அந்தப் பகுதிகளில் வாழும் மக்கள் நாகூரான் தோட்டம், கீரைத் தோட்டம், கடற்கரை நகர், மீனவர்காலனி ஆகிய இடங்களில் கட்டப்படும் அடுக்குமாடி வீடுகளில் குடி அமர்த்தப்படுவார்கள் என்று ராமபத்திரன் தெரிவித்தார்.

கடலரிப்பைத் தடுக்க குடிசைமாற்று வாரியமும் பொதுப்பணித் துறையும் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுத்துள்ளன.

சென்னையில்புதியகுடிசை பகுதிகள் உருவாகாமல் கண்காணிக்க நடமாடும் கண்காணிப்பு பிரிவுகள் அமைக்கப்படும்.

வடசென்னையில்ஒன்றும், தென் சென்னையில் ஒன்றுமாக 2 அணிகள் செயல்படும்.

இதில் போலீஸ் அதிகாரிகளும், ரெவின்யூ அதிகாரிகளும் இடம்பெறுவார்கள்.

2 சப்-இன்ஸ்பெக்டர்கள் 8 போலீசார், 2 உதவி தாசில்தார், 4 ரெவின்யூ இன்ஸ்பெக்டர்கள் ஆகியோரை அரசு இதற்காக ஒதுக்கியுள்ளது என்று ராமபத்திரன் கூறினார்.

## உதகையில் அமைச்சர் பொன்னையன்

சென்னை, மே 16- மே 17, 18, 19 தேதிகளில் உதகமண்டலத்தில் நடக்கும் தென்மண்டல போக்குவரத்து அமைச்சர்கள் மாநாட்டில் தமிழகஅமைச்சர் பொன்னையன் மூன்று நாட்களிலும் பங்கேற்கிறார்.

சென்னையில் புயல் மழையினால் பாதிக்கப்பட்ட பலகை தொட்டிக் குப்பம் பகுதியில் கழகத் தொண்டர்கள் மீட்புப் பணியில் ஈடுபட்டனர்.

## கழக சட்டமன்ற உறுப்பினர்கட்கு முக்கிய அறிவிப்பு

அன்புடையீர்,

வணக்கம்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் தலைமையில் தமிழக அமைச்சர்கள், சட்டப்பேரவை, மேலவை, நாடாளுமன்ற உறுப்பினர்கள் புதுடெல்லியில் ஊர்வலமாகச் சென்று நெல்லுக்கு அதிக விலை கொடுக்கவேண்டும் என்ற கோரிக்கை மனுவை குடியரசுத்தலைவர், பிரதமர், துணைப் பிரதமர்களிடம் கொடுக்க இருக்கிறோம்.

24-5-1979 அன்று காலை 8 மணி அளவில் புதுடெல்லியில் ஊர்வலமாக செல்ல இருக்கிறோம். எனவே, சட்டப்பேரவை, மேலவை, நாடாளுமன்ற உறுப்பினர்கள் புதுடெல்லிக்கு குறிப்பிட்ட நேரத்தில் வருமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ஊர்வலம் புறப்படும் இடம் மற்ற விவரங்கள் அவ்வப்போது தெரிவிக்கப்படும்.

துரை கோவிந்தராசன் எம்.எல்.ஏ.,
அரசு தலைமைக் கொறடா.

16-5-79

## கோவாவில் சபாநாயகர் முனு ஆதி

பனாஜி,மே 16- கோவா மாநிலத்தில் சுற்றுப் பயணம் செய்வதற்காக தமிழக சட்டமன்ற சபாநாயகர் முனு ஆதி கோவா தலைநகரான பனாஜிக்கு வந்துள்ளார். அவர் பின்னர் பம்பாய் செல்வார்.

## புயல் வெள்ளத்தால் ஆந்திராவில் ஒரு கிராமமே அழிந்தது

# இறந்தோர் தொகை 1000 ஆக உயர்வு

## பல ஊர்களுக்கு நிவாரண உதவி செய்ய முடியாதபடி வெள்ளம்

ஐதராபாத்,மே 16-ஆந்திராவில் ஏற்பட்ட புயல் வெள்ளத்தால் இறந்தவர்கள் எண்ணிக்கை ஆயிரம் பேர் அளவுக்கு இருக்கும் என்று அஞ்சப்படுகிறது. வெள்ளத்தால் ஒரு கிராமமே அழிந்துவிட்டது.

வங்கக்கடலில் ஏற்பட்ட புயல் சின்னம் வலுவடைந்து ஆந்திராவில் உள்ள பிரகாசம் மாவட்டத்தை கடுமையாகத் தாக்கியுள்ளது. நெல்லூர் மாவட்டமும், புயல் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ளது.

பிரகாசம் மாவட்டத்தில் பல கிராமங்களில் இன்னமும் பத்துஅடி தண்ணீருக்கு மேல் உள்ளது.

இதனுல் ஏராளமான பேர் இறந்துள்ளனர் தப்பிப்பிழைத்தவர்கள். கூரைகளிலும்,மரத்தின்உச்சிகளிலும் இருக்கிறுர்கள்.

தங்கதூர் கிராமம் வெள்ளத்தால் அடியோடு அழிந்துவிட்டது. அந்த ஊரில் உள்ள 200க்கும் மேற்பட்டவர்கள்அப்படியே வெள்ளத்தில் அடித்துக் செல்லப்பட்டார்கள்.அந்த கிராமத்திலும் இன்னமும் பத்து அடி தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கிறது.

இறந்தவர்கள் எண்ணிக்கை 500 பேருக்கு மேல் இருக்கும் என்று முதல்வர் சென்னுரெட்டி கூறிய போதிலும் மொத்தம் ஆயிரம் பேர் இறந்திருப்பவர்கள் என்று அஞ்சப்படுகிறது.

ஒருலட்சத்து 50 ஆயிரம் வீடுகள் இடிந்தன. 80ஆயிரம் ஹெக்டேருக்கு அதிகமான நிலங்களில் உள்ள பயிர்கள் பாழாகியுள்ளன. 10 லட்சம் மக்கள் வீடு இழந்து தவிக்கிறுர்கள்.

ஏராளமான மாவட்டங்கள்கடுமையான வெள்ளத்தால் சூழப்பட்டுள்ளன. இதனுல் பல ஊர்களுக்கு நிவாரண உதவி போய்ச் சேரவில்லை என்ற புகார்களும் எழுந்துள்ளன.

ராணுவ படகுகள் மூலம் உதவிகள் அளிக்கப்படுகின்றன. விமானம் மூலமும் உணவு பொட்டலங்கள் போடப்படுகின்றன.

காவிரி என்ற இடத்திலிருந்து தங்குதூர் என்ற இடம் வரை ரயில்பாதையில் 48 கிலோ மீட்டர் தூரத்துக்கு பிணங்களாகக் கிடப்பதாகத்தகவல் கிடைத்துள்ளது.

ஆந்திராவில் புயலினுல் பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஜனுதிபதி சஞ்சீவரெட்டி தனது அனுதாபத்தை தெரிவித்துள்ளார்.

பிரதமர் நிவாரண நிதியிலிருந்து 5 லட்சம் ரூபாயை பிரதமர் மொரார்ஜி ஆந்திராவுக்கு அனுப்பியுள்ளார்.

### வி. வி. கிரி ரயில்வே பாஸ் ரத்து

புதுடெல்லி, மே 16-இந்தியக் குடியரசின் முன்னுள் தலைவர் வி. வி.கிரிக்கு இலவசமாக ரயிலில் பயணம் செய்ய வழங்கப்பட்டிருந்த பாஸ் ரத்து செய்யப்பட்டுவிட்டது.

திருத்தப்பட்ட ரயில்வே விதிகளில் முன்னுள் ஜனுதிபதிக்கு இலவசபாஸ்வழங்க இடம் இல்லாததால் 1977 செப்டம்பர் மாதத்தில் வி.வி.கிரியின் ரயில்வே பாஸ் ரத்துச்செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது.

✻

துணைசபாநாயகர்

### திருநாவுக்கரசு நிகழ்ச்சிகள்

மே 17ந் தேதி காலை 6 மணி மதுரை,10மணி தாந்தாணி,மாலை 4மணி எரிச்சி இரவு 7 மணி அறந்தாங்கி.

18ந் தேதி காலை 10மணி அம்மாபட்டினம் மீனவர் காலனி, இரவு 7 மணி இடையாத்திமங்கலம் பொது மக்கள் வரவேற்பு.

19ந் தேதி காலை 10மணி திருநாளூர் கிராமக் கூட்டுறவு சங்க கிடங்கு திறப்பு விழா, மாலை 6 மணி ஆளப்பிறந்தான், இரவு 12.30 மணி மதுரை.

✻

புயல் நிவாரணம்:

### தமிழகத்திற்கு கருநாடகம் ரூபாய் 1 லட்சம் உதவி

பெங்களூர்,மே 16-ஆந்திராவிலும், தமிழகத்திலும் புயல் மழையினுல் அவதிப்படுகிறவர்களுக்கு நிவாரணம் அளிக்க கருநாடக அரசு ஐந்து லட்ச ரூபாய் கொடுக்கிறது.

ஆந்திராவிற்கு நான்கு லட்ச ரூபாயும் தமிழ்நாட்டிற்கு ஒரு லட்ச ரூபாயும் வழங்கப்படுகிறது.

கருநாடக சட்டமன்றத்தில் இத்தகவலைமுதலமைச்சர் தேவராஜ் அர்ஸ் தெரிவித்தார்.

✻

### மகுடஞ்சாவடி அண்ணு தமிழ் இலக்கிய கழகம்

சேலம், மே 16-சேலம் மாவட்டம் மகுடஞ்சாவடி அண்ணு தமிழ் இலக்கியக் கழக அமைப்புக் கூட்டம் அனைத்திந்திய அண்ணு தி. மு. க. கிளை அமைப்பாளர் வே. மாணிக்கம் தையற் கடையில் நடைபெற்றது. கூட்டத்திற்கு தெற்குச் சேலம் மாவட்ட அண்ணு தமிழ் இலக்கியக் கழகப் பொறுப்பாளர் ஆ. கிள்ளிவளவன் தலைமை வகித்தார். கூட்டத்திற்குத் திரளாக இலக்கிய ஆர்வம் மிக்கோர் வந்திருந்தனர்.

மகுடஞ்சாவடி அண்ணு தமிழ் இலக்கியக் கழகத்திற்கு எஸ். கந்தசாமி தலைவராகவும், சு. முருகபூபதி மு. நைனு துணைத் தலைவர்களாகவும், எஸ். சம்பத்குமார் செயலாளராகவும், கோ. மாணிக்கம் துணைச் செயலாளராகவும் செயற்குழு உறுப்பினர்களாக 24 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### ஐதராபாத்தில் ஜனுதிபதி ரெட்டி

ஐதராபாத், மே 16-இந்தியக்குடியரசுத்தலைவர் நீலம் சஞ்சீவரெட்டி மே மாதம் 20ந் தேதி ஐதராபாத் வந்து சேருகிறுர்.

ஜூலை மாதம் 14ம்தேதி வரை ரெட்டி ஐதராபாத் போலாராமிலுள்ள ஜனுதிபதி இல்லத்தில் தங்கியிருப்பார்.

✻ஜனதா - தி.மு.க.விலிருந்து விலகி

### 20 பேர் கழகத்தில் இணைந்தனர்

சிதம்பரம்,மே 16-புவனகிரி, 5-வது வார்டிலிருந்த திமுக, ஜனதாக் கட்சியைச்சேர்ந்த 20 பேர் தங்கள் கட்சிகளிருந்துவிலகி கழகத்தில் இணைந்தனர்.

மேல் புவனகிரி, பர்வதராஜ குல வீதியில் நடந்த கழகக்கொடியேற்று விழாவில் கலந்து கொண்டு கே. கலைமணி கழகக்கொடியேற்றினுர்.

கே.ராமர்,என்.குப்பன், பி. திருநாவுக்கரசு, சி. சட்டையப்பன் மற்றும் பலர் பேசினர்.

## பத்திரிகைகளை ஜோதிபாசு அரசு மிரட்டுகிறது

நாடாளுமன்றத்தில் புகார்

புதுடெல்லி, மே 16 - பத்திரிகைகளை மேற்கு வங்காள அரசு "பிளாக் மெயில்" செய்வதாக நாடாளு மன்றத்தில் குற்றம் சாட்டப்பட்டது.

நாடாளுமன்றத்தில் பேசிய பி. எம். சாயீத், மாநில அரசு பத்திரிகைகளுக்கு விளம்பரம் கொடுப்பதுபற்றிக் குறிப்பிட்டார்.

மேற்கு வங்காள அரசும் டெல்லிமாநகர் நிர்வாகமும் இவ்வாறு விளம்பரம் கொடுப்பதை வைத்து பத்திரிகைகளை வற்புறுத்தி பிளாக்மெயில் செய்வதாக அவர் புகார் கூறினுர்.

தகவல் ஒலிபரப்பு அமைச்சர் அத்வானி பதிலளிக்கையில்'மத்தியஅரசின் விளம்பரங்களை பத்திரிகைகளுக்குக் கொடுப்பதில் அரசியல்கள்கண்ணுேட்டம் ஏதும் இல்லை' என்றுர்.

மாநில அரசு ஏதாவது அவ்வாறு செய்தால் அந்த விஷயத்தை பத்திரிகை கவுன்சிலுக்குக் கொண்டு போகலாம் என்றும் குறிப்பிட்டார்.

குறிப்பிட்ட புகாரைச் சொன்னுல் சம்பந்தப்பட்ட மாநில அரசுக்கு எழுதுவேன். அதற்கு மேல் மத்திய அரசால்இந்த விஷயத்தில் எதுவும் செய்ய முடியாதுஎன்றும் அத்வானி கூறினுர்.

பத்திரிகைச் சுதந்திரத்தைக் காக்க ஆர்வம் கொண்டுள்ளோம். அரசியல் சட்டவிதிமுறைகளுக்கு உட்பட்டே நாங்கள் செயல்படுவோம் என்றும் அத்வானி கூறினுர்.

### அமைச்சர் காளிமுத்து நிகழ்ச்சிகள்

மே 17- மதுரை-பட்டுராஜன் ஏற்பாடு செய்த நிகழ்ச்சிகளில் பங்கேற்பு 18-காலை 10 மணி-ராமநாதபுரம் பஞ்சாயத்து யூனியன் அம்மன் கோவில் பள்ளிக் கட்டிடம் திறப்புவிழா-பேராவூரணி ஐ.ஆர்.டி.பி விழா 20 காலை உணவு அமைச்சர் எட்மண்ட் கலந்து கொள்ளும் நிகழ்ச்சிகளில் பங்கேற்பு மாலை- நாகர்கோவில் பொதுமக்கள் வரவேற்பு 21-சாத்தூர், 22-மதுரை

தற்கொலை செய்யு முன்

## நாடக மேடையில் நடிகை கல்பனுவை அடித்து உதைத்தனர்

சட்டமன்றத்தில் புகார்

பெங்களூர், மே 16- நடிகை கல்பனு தற்கொலை செய்துகொள்ளுமுன் நாடகமேடையில் அவரை நாடகக் கம்பெனி அதிபர் அடித்து உதைத்ததாக கூறப்படுகிறது என்று கருனடக சட்டசபையில் புகார் கூறப்பட்டது.

மதராஸ்-டு - பாண்டிச்சேரி, சாதுமிரண்டால், பட்டத்து ராணி ஆகிய படங்களில் நடித்திருப்பவர் கல்பனு.

கருனடக மாநிலம் பெல்காம் மாவட்டத்தில் சங்கேஸ்வர் என்ற இடத்தின் அருகே கோடூர் என்ற ஊரில் படுக்கையில் அவர் இறந்து கிடந்தார். அவர் தற்கொலை செய்து கொண்டதாக கூறப்படுகிறது. அவர் எழுதியாக கூறப்படும் கடிதமும் கைப்பற்றப்பட்டது. அதில் கல்பனுவின் கையெழுத்து இல்லை. தனது சாவுக்கு தானே காரணம் என்று அதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கல்பனு மரணம் பற்றி கருனடக சட்டசபையில் பல்வேறு சந்தேகங்கள் கிளப்பப்பட்டன.

கல்பனு உடலில் காயங்கள் ஏதும் இல்லை என்று புலனுய்வில் தெரிய வந்திருப்பதாக முதல்வர் தேவராஜ் அர்ஸ் கூறினுர்.

பெல்காமில் கல்பனு உடல் பிரேத பரிசோதனை செய்யப்பட்டது. பிரேத பரிசோதனை அறிக்கை இன்னமும் வரவில்லை என்று அர்ஸ் கூறினுர். குடல் ரசாயன பரிசோதனைக்கு அனுப்பப்பட்டுள்ளது.

சம்பவத்தன்று (கடந்த 11ந் தேதி) கல்பனு காலை 11 மணிக்கு படுக்கைக்குச் சென்றுர். மாலை வரை விழிக்கவில்லை. இரவு 10.30 மணிக்கு கதவைத் திறந்த போது இறந்து கிடந்தார்.

சங்கேஸ்வர் என்ற இடத்தில் இருந்த அவரது நாடக குழுவுக்குத் தகவல் அனுப்பப் பட்டது.

நாடகக் கம்பெனியிலிருந்து வந்த நேரத்திலிருந்து கல்பனு நிம்மதி இன்றிஇருந்தார் என்று வேலைக்காரி தெரிவித்தார்.

மோதிரத்தில் உள்ள வைரக்கல்லை நொறுக்கித் தின்று அவர் தற்கொலை செய்து கொண்டதாக தகவல் கிடைத்திருப்பதாக தேவராஜ் அர்ஸ் சட்டசபையில் கூறினுர்.

இதுபற்றி வழக்கு பதிவு செய்து புலன் விசாரணை நடந்து வருகிறது என்றும் அவர் தெரிவித்தார்.

நாடக கம்பெனி உரிமையாளர் பசவராஜ் நாடக மேடையில் வைத்து கல்பனுவை அடித்து உதைத்ததாக கூறப்படுகிறது.

இது உண்மையா என்று சயனக் என்ற உறுப்பினர் கேட்டார்.

தவணகிரி என்ற இடத்தில் தெருவில் வைத்தே கல்பனுவை அவர் உதைத்ததாகவும் கூறப்படுகிறது. இது உண்மையா என்றும் அவர் கேட்டார்.

இதுபற்றி விசாரிக்க வேண்டியுள்ளது என்று முதல்வர் தேவராஜ்அர்ஸ் கூறினுர்.

### நீர்மட்டம்

சென்னை, மே 16-தமிழ் நாட்டில் நீர்த்தேக்க அணைகளின் நீர்மட்டம் மீட்டர் அளவுகளில் கீழே தரப்பட்டுள்ளது. அடைப்புக்குறி உள்ள அளவு அணையின் முழு அளவு நீர் மட்டத்தைக் குறிக்கும்.

மேட்டூர் 25.71 (36-58)
பெரியாறு 4.42 (14-63)
வைகை 17.07 (21-64)
பாபநாசம் 20.94 (45-11)
கிருஷ்ணகிரி 11.07 (15-85)
சாத்தனுர் 25.82 (36-27)
மணிமுத்தாறு 28.52 (35-97)
பேச்சிப் பாறை 8.67 (14-63)
பெருஞ்சாணி 8.43 (23-47)

### தஞ்சை-நாகை இடைத் தேர்தல்: கலைக்குழு அறிவிப்பு

சென்னை, மே 16 - தஞ்சை, நாகை இடைத் தேர்தலையொட்டி, கழகப் பிரச்சாரம் - கலை நிகழ்ச்சிகள் நடத்த விரும்பும் கழகத் தோழர்கள் 'டேப் பொன்னையன், 25 அண்ணு நகர், விழுப்புரம்' என்ற முகவரியில் தொடர்புகொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

இந்த மாதம் 20ம்தேதி முதல் இந்த தொகுதிகளில் இந்தக் குழுவினர் கலை நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர்.

வண்ணைத் தோழர்கள் அறிக்கை

## புயல்வருமுன்பாதுகாத்த புரட்சித்தலைவரை குறை சொல்லும்தி.மு.க.மோசடி

சென்னை,மே 16- புயல் சேதம்பற்றியும்துயர்தணிப்புப் பணிகள் குறித்தும் தி.மு.க. எம்.எல்.ஏ. பொன்னுரங்கம் என்பவர் வெளியிட்ட அறிக்கை மோசடியானது என்று வடசென்னை நாடாளுமன்ற தொகுதி எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் வண்ணை இ. மதுசூதனன், அண்ணு விசைப் படகு மீனவர் சங்க செயலாளர் ஆர். ஞானசேகரன் இருவரும் ஒரு அறிக்கையில் கூறியுள்ளனர்.

அந்த அறிக்கையின் விவரம் வருமாறு:

புயல் ஏற்பட்டப் பகுதிகளையே பார்க்காமல் கற்பனையில் இருந்து கொண்டு தி.மு.க. எம். எல். ஏ. அறிக்கை வெளியிட்டிருக்கிறுர்.

புயல் வரும் என்று வானிலை அறிக்கை வெளிவந்தவுடனேயே மீனவர்கள் பெருவாரியாக வாழும் கடற்கரைப் பகுதிகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் விரைந்து சென்றுர். தக்க பாதுகாப்புஏற்பாடுகளுக்கு உத்தரவிட்டார்.கடலோர மீனவர்களுக்கு உணவு-இருப்பிட வசதிகளை ஏற்படுத்தித்தர உத்தர விட்டார். இதுபோல முன் எச்சரிக்கையுடன் எந்த முதலமைச்சரும்நடந்துகொண்டதில்லை. கருணுநிதி முதலமைச்சராக இருந்த போது அவர் இப்படி முன் கூட்டியே வந்து பார்த்ததும் கிடையாது. நடவடிக்கை எடுத்ததும் கிடையாது. இந்த லட்சணத்தில் புரட்சித்தலைவர் மீது தி. மு. க. எம்.எல்.ஏ பொன்னுரங்கம் குற்றம் சாட்டுவது அப்பட்டமான மோசடியாகும்.

மழையென்றும் புயலென்றும் பாராமல் மக்களைநேரடியாக சந்தித்தபுரட்சிதலைவர் மீன் வளத்துறை அதிகாரிகளை அனுப்பி உடனடி உதவிகளுக்கு ஏற்பாடு செய்தார்.

மாருக மேற்படிஅறிக்கை விட்ட திமுக எம்எல்ஏ தான் மீனவர்களை சந்திக்காமலும் அவர்கள் குறைகளைத் தீர்க்க சட்ட மன்ற உறுப்பினர்என்றமுறையில் கடமை ஆற்றுமலும் இருந்து வருகிறுர் என்று மக்கள் கூறுகிறுர்கள்.

மக்களின் நல்வாழ்வே தனது உயிர்மூச்சு என்று கருதி பாடுபடும் புரட்சித் தலைவர்மீது வயிற்று எரிச்சல் காரணமாக தி.மு.க. எம்.எல்.ஏ. பொன்னுரங்கம் போன்றவர்கள் விடும் அறிக்கை போலியானது, பொய்யானது என்பதை கடலோரத்தில் வசிக்கும் மீனவர் உட்பட அனைத்து மக்களும் நன்கு அறிவார்கள்.

தி. மு. க. வினரின் இத்தகைய அவதூறுகளை மீனவர் சமுதாயம் முறியடிக்கும். இவ்வாறு இ. மதுசூதனன், ஆர். ஞானசேகரன் இருவரும் தங்கள் அறிக்கையில் கூறியுள்ளனர்.

### 'குளிக்காத' மந்திரிகள்

புதுடெல்லி, மே 16-புதுடெல்லியில் சில பகுதிகளுக்கு தண்ணீர் சப்ளை இல்லாததால் மத்திய மந்திரிகள் சிலரும், எம்.பி.க்களும் நேற்று குளிக்க முடியவில்லை.

மாநிலங்களவையில் கேள்வி நேரம் முடிந்ததும் ராமானந்த்யாதவ்(இ.காங்) டெல்லி தெற்கு அவின்யூ பிளாட்டுக்கு தண்ணீர் சப்ளை நிறுத்தப்பட்டு விட்டது என்று கூறினுர்.

டெல்லியில் இ. காங்கிரஸ் ஊர்வலத்தில் கலந்துகொள்ள வந்திருப்பவர்கள் தெற்கு அவின்யூ பகுதியில் தங்கி இருக்கிறுர்கள்.அவர்களைத் துன்புறுத்தவே தண்ணீர் சப்ளை நிறுத்தப்பட்டுள்ளதுஎன்று ராமானந்த்யாதவ்கூறினுர்

ஏ. ஜி. குல்கர்னியும் (காங்கிரஸ்)தண்ணீர்சப்ளை நிறுத்தப்பட்டு விட்டது என்ற புகாரைச்சொன்னுர்

"நான் வீட்டு வசதி அமைச்சர் சிக்கந்தர் பக்துக்குப் போன் செய்தேன். உடனே அவர் 'இப்போது தான்வாஜ்பாயிடமிருந்தும் எனக்கு ஒரு புகார் வந்தது. அவர் வீட்டுக்கும் தண்ணீர் சப்ளை இல்லையாம்.அவரும்குளிக்கவில்லை. நானும் (சிக்கந்தர் பக்த்) குளிக்கவில்லை, கை கால் முகம் கழுவி விட்டு வந்தேன் என்று என்னிடம் பக்த்கூறினுர்' என்று ஏ.ஜி. குல்கர்னி குறிப்பிட்டார்.

திருத்துறைப்பூண்டிஒன்றிய

### அண்ணு விவசாய சங்க கூட்டம்

கீழத் தஞ்சை மாவட்ட நாகை நாடாளுமன்ற அண்ணு விவசாய தொழிற் சங்க திருத்துறைப்பூண்டி ஒன்றியக் கூட்டம், நாகை நாடாளுமன்ற அண்ணு விவசாய தொழிற்சங்கச் செயலர் சேதி. சு. பாலன் தலைமையில் திருத்துறைப்பூண்டி சண்முகா லாட்ஜ் மாடியில் 17-5-79 வியாழக்கிழமை மாலை 2 மணி அளவில் நடைபெற உள்ளது. அண்ணுதொழிற் சங்க அமைப்பாளர்கள் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறுர்கள்.

### மீன்பிடி விசைப்படகு கட்டணம் செலுத்த ! காலக்கெடு

சென்னை, மே 16-திருத்தம் செய்யப்பட்ட 1953-ம் ஆண்டு சிறு துறைமுகம் துறைமுகப் படகுகள் சட்டவிதிகளின்படி மீன்பிடி விசைப்படகுகள் மற்றும் இயந்திரம் பொருத்தப்பட்ட தோணிகள் அல்லது கட்டுமரங்கள் அருகாமையிலுள்ள துறைமுக அலுவலகங்களில் அதற்கான கட்டணம் செலுத்தி பதிவு செய்து உரிமம் பெற்றுக்கொள்ள வேண்டும்.

அவ்வாறு பதிவு செய்து கொள்வதற்கான கடைசி நாள் 15-6-79 வரை நீடிக்கப்பட்டுள்ளது.

நிர்ணயிக்கப்பட்டகாலத்திற்குள் துறைமுக அலுவலகங்களில் பதிவு செய்து உரிமம் பெருத விசைப் படகு மற்றும் இயந்திரம் பொருத்தப்பட்ட தோணிகள் அல்லது கட்டு மரங்கள் கடலில் மீன் பிடிக்கச் செல்லும் உரிமையை இழக்கும் என்று அறிவிக்கப்படுகிறது.

### கலைக்குழு முகவரி

குடந்தை செல்வா சுந்தரம் கலைக்குழு 149, துக்காம்பாளையத் தெரு கும்பகோணம்-612001.

## ஜாம்ஷெட்பூர் கலவரம் பற்றி விசாரிக்க கமிஷன் நியமனம்

பாட்னு, மே 16-ஜாம்ஷெட்பூரில் கடந்த மாதம் நடந்த வகுப்புக் கலவரம் பற்றி மூன்று பேர் கொண்ட கமிஷனை பீகார் அரசு நியமித்துள்ளது.

ஓய்வுபெற்ற பாட்னு உயர் நீதிமன்ற நீதிபதி ஜிதேந்திர நாராயணன் தலைமையில் கமிஷன் அமைக்கப்பட்டுள்ளது.

ஓய்வு பெற்ற ஐ. சி.எஸ். அதிகாரி, பி.வி. அகர்வால் பீகார் முன்னுள் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் நிஜ்வி ஆகியோர் கமிஷனின் மற்றைய உறுப்பினர்கள் ஆவார்கள்.

வகுப்புக்கலவரங்களுக்கான காரணம், சந்தர்ப்ப சூழ்நிலை, அவற்றுக்குக் காரணமான நபர்கள் ஆகியனா குறித்து கமிஷன் விசாரணை நடத்தும்.

செப்டம்பர் மாதம் 30-ஆம் தேதிக்குள் அறிக்கை சமர்ப்பிக்குமாறு கமிஷன் கோரப்பட்டுள்ளது என்று பீகார்முதல்வர் ராம்சுந்தர் தாஸ் கூறினுர்.

# அண்ணா




## ★ கழகச் செய்திகள் ★

### திருச்சி

திருச்சி தில்லைநகர் 7-வது குறிக்குச் சந்திலையில் எம். எஸ். நித்தியானந்தம் தலைமையில் கழகப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் நெல்லை கே. ஆர். பி. மணிமொழியன், கரு. அன்புதாசன். பி.ஜே. குமார், கே. எம். ஷேக் தாவுத், டி.கே. சண்முகம், கிராப்பட்டி எ. முகமது, டி.எம்.மொய்தீன், துரை, அமீர்ஜான் ஆகியோர் பேசினார்கள்.

### குறிஞ்சிப்பாடி

20-5-79 மாலை 6 மணிக்கு அண்ணா திடல் பஸ் நிலையம் அருகே எம். கே. எம். சுல்தான் தலைமையில் பேசுவோர்: ஜேப்பியார், ரத்தின பாலகுருசாமி எம். எல். சி, ஏ. முருகேசன் எம். பி. ஏ. தங்கராசு, பி. செல்வராசு, கே. சந்திரன், கே. சண்முகம், பி. ஜோதி, ஏ. பி. சினிவாசன், வி. எம். ஆறுமுகம் மற்றும் பலர்.

### திருச்சி

திருச்சி 43வது வட்டத்தில் அனைத்திந்திய அண்ணா திமுக 43வது வட்டகழக உறுப்பினர்கள் கூட்டம் வென்னிஸ் நகரில் டி. கே, சண்முகம் தலைமையிலும், ஜே. டேவிட்ஸ் துரைராஜ் முன்னிலையிலும் நடைபெற்றது.

கூட்டத்தில் வழக்கறிஞர் கே. பெருமாள், பி. ஜே. குமார், கே. எம். ஷேக் தாவூத், பா. பா. சு.மணி எஸ். கலியபெருமாள், கிராப்பட்டி ஏ. முகமது எம்.அழகிரி, ஏ.சிக்கந்தர், சி. ஆறுமுகம் ஆகியோர் கலந்துகொண்டனர்.

### வண்ணை

17-5-79 மாலை 6-30 மணிக்கு காளிங்கராயமுதலித் தெருவில் ஆர். எம்.டி ஆசைத்தம்பி தலைமையில் பேசுவோர்: பெ. சந்திரா, வண்ணை மு. பாண்டியன், அன்புரோஸ், வண்ணைமுத்துக்குமார், தாஸ், மதுசூதனன், இரா. சந்தானம், ஆ தாமோதரன், தயாளன், அனந்தப்பன் மற்றும்பலர்.

### நெல்லை கலையரசன் நிகழ்ச்சிகள்

மே. 18- 19- சென்னை 20- எர்ணாவூர், 21- சென்னை, 22- செங்கல் பட்டு.

தலைமைக்கழக அறிவிப்பு:

## தஞ்சை நகர கழகத் தோழர்களுக்கு

தஞ்சாவூர் நகர அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் வார்டு கிளைகள் அமைக்க அனகாபுத்தூர் சி. ராமலிங்கம் எம். எல்.சி. அவர்கள் 17-5-79 காலை 9 மணியளவில் தஞ்சை வருகிறார்.

காலை 9 மணிக்கு 6 வது வார்டு மறு பரிசீலனை.
காலை 9-30 மணி 7 வது வார்டு மறு பரிசீலனை.
காலை 10 மணி 8 வது வார்டு மறுபரிசீலனை.
காலை 10-30 மணி 13 வது வார்டு மறுபரிசீலனை.
காலை 11 மணி 35 வது வார்டு மறுபரிசீலனை.
பிற்பகல் 2 மணி 20 வது வார்டு புதிய நிர்வாகிகள் தேர்வு.
மாலை 2.30 மணி 30 வது வார்டு புதிய நிர்வாகிகள் தேர்வு.
மாலை 3.00 மணி 27 வது வார்டு புதிய நிர்வாகிகள் தேர்வு.
மாலை 3.30 மணி 28 வது வார்டு புதிய நிர்வாகிகள் தேர்வு.
மாலை 4 மணி 26 வது வார்டு புதிய நிர்வாகிகள் தேர்வு.

கழக தோழர்கள் கிளைக்கழக உறுப்பினர்களையும் வார்டு உறுப்பினர்களையும் பொதுக்குழு உறுப்பினர் மன்ற, மாணவ, மகளிர், தொழிற்சங்க அமைப்புகளை சேர்ந்தவர்களையும் சேர்த்து வைத்து நிர்வாக தேர்தல் நடத்த ஒத்துழைப்பு தரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறது.

எச். வி. ஹண்டே எம். எல். சி,
சென்னை - 14, அமைப்புச் செயலாளர்.
16-5-79.



தண்ணீர்ப்பந்தல் ப. நடராசன்

## கலை விருந்து



''ரோசாப்பூ ரவிக்கைக்காரி'' படத்தில் சிவகுமார், தீபா.



''நாயக்கர் மகள்'' படத்தில் ஜெயசித்ரா, விஜயகுமார்.



## வல்லபனின் பாடல் எழுதும் வல்லமை



''பிலிமாலயா'' எம்.ஜி. வல்லபன் பல திரைப்படங்களுக்கு பாடல்கள் எழுதி வருகிறார். நீண்ட நாட்களாக பத்திரிக்கை துறையில் பணியாற்றி வரும் எம். ஜி. வல்லபன் பட்டதாரி. திரைப்படத்துறையில் மிகவும் ஆர்வம் கொண்டவர்.

கவிதை எழுதுவதிலும் நல்லதிறமையுள்ள எம்.ஜி. வல்லபனை இப்போது திரையுலகம் பயன்படுத்தத் தொடங்கியுள்ளது. அவர் எழுதிய பாடல்கள் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளன.

''கரை கடந்த குறத்தி'' படத்தில் ஜானகி பாடி கங்கை அமரன் இசையமைப்பில் ஒளிப்பதிவு செய்யப்பட்ட பாடல்இது.

''ஓடத்திலே தண்ணீரு
ஒரு குறத்தி கண்ணீரு
ஓடம் போய் ஊரு சேருமா
என் ராசாதி ராசா
ஒன் நெனப்பு நெஞ்சில்
மாறுமா?''

இப்பாடல் ஜெமினி ஸ்டுடியோவில் பதிவு செய்யப்பட்டது.

தர்மயுத்தம் படத்தில் இளையராஜா இசையமைப்பில் மலேசியா வாசுதேவன் ஜானகி பாடியபாடல் இது

''ஆகாய கங்கை
பூந்தேன் மலர் சூடி
பொன்மான் விழி தேடி
மேடைகட்டி மேளம்தட்டி
பாடுதே மங்கலம்
நாடுதே சங்கமம்
மௌன விழியில்
மதன மொழியே
மலர்மாத மாலை குளிர்
வாடை
புலர்கால வேளை
தரும்போதை
நீயே நீலமலரே''

'24சி;வேதபுரத்து முதல் வீதி' படத்தில் கங்கை அமரன் இசையமைப்பில் பாலசுப்ரமணியம் பாடியபாடல் இது.

இவைகள் தவிர 'உதிரிப் பூக்கள்', 'அணில் கடித்த பழம்' ஆகிய படங்களுக்கும் வல்லபன் பாடல்கள் எழுதியுள்ளார்.

★ ★ ★

''சேர்க்கத்தின் திறப்பு விழா'' படத்தில் ஜெய்கணேஷ் ஜெயமாலினி

## ஜெய்கணேஷ் காதலி ராதிகாவுக்கு ஆபத்து

கீதா பணக்கார வீட்டுப் பெண். ஒருநாளைக்கு மூன்று உடைகள் உடுத்தி உல்லாச வாழ்க்கை வாழ்ந்து வந்தாள். இந்த கட்டிளங் கன்னியை பல வாலிபர்கள் நோட்டமிட்டனர். ஒரு வாலிபன் பல மாதங்கள் அவளையே வட்டமிட்டு வந்தான். ஒருவரிடமும் சிக்காத அவள் அவனிடம் சிக்கினாள்.

அவள் சில சமயங்களில் விளையாட்டுத்தனமாகவும் கேலியாகவும் பேசுவாள். அந்த வாலிபனிடம் 'உன்னை காதலிக்கிறேன்' என்றாள்.

அவன் தலைகால் தெரியாமல் குதித்தான். ஆனால் இந்த கன்னிக்கோ ஒரு காதலன் உண்டு. அவனோடு தான் சினிமா கடற்கரை இப்படி சுற்றிக் கொண்டிருந்தாள்.

ஒருநாள் அந்த வாலிபன் இவளைப்பார்த்துவிட்டான். அதுவும் அவளுடைய காதலனுடன் பல இடங்களில் சுற்றுவதை நேராகப் பார்த்துவிட்டான்.

தன்னைஏமாற்றிய இவளை எப்படியும் அடைந்தே தீருவது என்ற முடிவுடன் ஒரு நாள் தனியாகவந்தஇவளைக் கெடுக்கமுயற்சி செய்தான். அவள் இவனுடன் போராடினாள். அவன்ஒருஇரும்புக் கம்பியால் இவளை அடித்து விட்டான். அப்பா என்று அலறியபடி அவள் விழுந்தாள்.



இக்காட்சி அழகு மூவிஸ் ''அன்பே சங்கீதா'' வண்ணப்படத்திற்காக படமாக்கப்பட்டது. கீதாவாக ராதிகாவும், ஏமாறும் வாலிபனாக அம்ஜத் குமாரும், காதலனாக ஜெய்கணேசும் நடித்தார்கள்.

சுமித்ரா, அசோகன், தேங்காய் சீனிவாசன், ஏ. சகுந்தலா விஜயமாலினி, மற்றும் பலர் நடிக்கிறார்கள்.

ஒளிப்பதிவை ரங்கா கவனிக்கிறார். இளையராஜா இசையமைத்துள்ளார்.

கதை வசனம் எழுதி காரைக்குடி நாராயணன் டைரக்ட் செய்கிறார்.

★ ★ ★

## 'அலங்காரி' படப்பிடிப்பு முடிந்தது

ஸ்ரீதுர்காபகவதி பிலிம்ஸ் தயாரிக்கும் 'அலங்காரி' படத்தின் படப்பிடிப்புமுடிவடைந்தது.

மனோரமா கதாநாயகியாக நடிக்கும்இப்படத்தில் சுருளிராஜன், தங்கவேலு, ராஜேஷ், அசோகன், மூர்த்தி, ஏ.சகுந்தலா மற்றும் பலர் நடித்துள்ளனர். சூலூர் கலைப்பித்தனின் பாடல்களுக்கு வி. குமார் இசையமைக்க, வெங்கடேஷ் ஒளிப்பதிவை கவனிக்க, திரைக்கதை வசனத்தை வெண்ணிறஆடை மூர்த்தி எழுதுகிறார். சி. எம்.நஞ்சப்பன் தயாரிக்கும் இப்படத்தை கோபு டைரக்ட் செய்துள்ளார்.

## ஊர்கோலம் பூமாலை ஊரெல்லாம் கொண்டாட்டம்

''இளமை விலாசங்கள்'' வண்ணப் படத்தின் துவக்க விழா ஏவி.எம். ஸ்டுடியோவில் நடைபெற்றது. அமைச்சர் காளிமுத்து பாடல் பதிவைத் துவக்கி வைத்தார்.

''ஊர்கோலம் பூமாலை
ஊரெல்லாம் கொண்
டாட்டம்
மோகம் இளமை வேகம்
மோகங்கள் தள்ளாட
மூச்செல்லாம் தீயாக
கொதித்தேன்
நெஞ்சம் தவித்தேன்''

என்று தொடங்கும் கவிஞர் நா. காமராசன் பாடலுக்கு சங்கர்-கணேஷ் இசையமைத்தனர்.

ஜெயலலிதா, விஜயகுமார் இணைந்து நடிக்கின்றனர். கே. எஸ். ராவ் ஒளிப்பதிவு செய்கிறார்.

கதை வசனம் எழுதி எம். எஸ். மது இயக்குகிறார். ஜே. சுப்பிரமணியம், என். நடராஜன் இருவரும் தயாரிக்கின்றனர்.

## 'தூரத்து இடிமுழக்கம்' ஆலப்புழையில் படப்பிடிப்பு

மீனவ இளைஞன் ஒருவனுக்கும், குயவப்பெண் ஒருத்திக்கும் இடையில் ஏற்படும் காதல், அதனால் ஏற்படும் சோதனைகளைச் சித்தரித்து 'தூரத்து இடிமுழக்கம்' என்ற பெயரில் சாயிசுதா பிலிம்சார் வண்ணப்படம் ஒன்றைத் தயாரித்து வருகின்றனர்.

விஜயகாந்த், பூர்ணிமா இருவரும் கதாநாயகன், கதாநாயகியாக அறிமுகமாகின்றனர்.

இந்தப் படத்திற்காக 6 பாடல்கள் ஒலிப்பதிவாகியுள்ளன.

கேரளாவில் கடலோரம் உள்ள ஆலப்புழையிலிருந்து கார்வார் வரையில் வெளிப்புறப் படப்பிடிப்பு நடக்கிறது.

ஆயிரம் தோணிகளின் அலங்கார அணி வகுப்பு பல நூறு துணை நடிகர்கள் அவைகளில் பயணம் செய்வது பாடி ஆடும் காட்சிகள் படமாக்கப்படுகின்றன.

உ சி லை சோமநாதன் கதை வசனம் எழுதுகிறார். என்.பாலகிருஷ்ணன் ஒளிப்பதிவு செய்கிறார்.

முற்றிலும் புதுமுகங்களே நடிக்கும் படம் ஒன்றை கே. விஜயன் டைரக் செய்வது இதுவே முதன் முறையாகும்.






தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது, அச்சிடுபவர் : பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004.

ஆசிரியர் : எம். ஜி. சக்ரபாணி